**L.D.**யின்

# நாடி ஜோதிட நுணுக்கங்கள்

வெ. ஸ்ரீனிவாசன், மன்சபம்
[ஸ்ரீ விஜய ஆண்டு புரட்டாசி 26
12/10/2013 சனிக்கிழமை].


நிலைபேசி : 04258 220867 அலைபேசி : 98436 77399



ஸ்ரீ சக்தி புத்தகநிலையம்

129, ஜவுளிக்கடை வீதி, தாராபுரம்



Email : gurugeeastro@yahoo.com.

# நாடி ஜோதிட நுணுக்கங்கள்

பிரம்ம ஞானி திரு. குரு ராமசுப்பு அவர்களின் தலைமையில் 1999 மே மாதத்தில் 10 நாட்கள் நடைபெற்ற நாடி ஜோதிட பயிற்சி வகுப்பில் நான் கூறிய கருத்துக்களின் தொகுப்பில் ஒரு பகுதி இந்நூல். நாடி முறையில் பலன் காணத் தேவையான அடிப்படைக் கருத்துக்கள் மட்டுமே இந்நூலில் உள்ளன. இதனை நன்கு அறிந்து கொண்டால் பலன்கள் காண்பது மிகவும் எளிது.

பாரம்பரிய முறையில் பலன் காணும் முறை முற்றிலும் வேறுபட்டது. கிரகங்களின் காரகத்தையும். கிரகங்களின் கோசாரத்தையும் மட்டுமே எடுத்துக் கொண்டு பலன் காண்பதே நாடி முறையின் தனிச் சிறப்பு.

ஜோதிடர்களுக்கு மிகவும் பயன்படும் நாடி ஜோதிட நுணுக்கங்கள் என்ற நூலுக்கு ஆதரவு தரும் அனைவருக்கும் எனது நன்றியை உரித்தாக்குகின்றேன். ஜோதிட உலகிற்கு நான் வருவதற்கு காரணமாக இருந்த பிரம்ம ஞானி அவர்கட்கு எனது நன்றி. இதனை புத்தகமாக வெளிகொணர்ந்த திரு. குருஜி.குப்புசாமி அவர்கட்கும் எனது நன்றி.

**எல்.துரைசாமி.M.A. M.Ed.**

# பதிப்புரை

நாடி முறையில் பலன்கள் கூறுவதற்கு முறையாக விதிகளை வகுத்து நடைமுறையில் பலன்கள் கூறினால் மிகச் சரியாக வருகிறது. நாடி முறையில் பலன்கள் கூறுவதில் உள்ள நுணுக்கங்களைப் பல ஆண்டுகளாக ஆராய்ந்து திரு L. துரைசாமி M.A., M.Ed அவர்கள் நாடி ஜோதிட நுணுக்கங்கள் என்ற பெயரில் 1999ம் ஆண்டு நாடி ஜோதிட பயிற்சி வகுப்புகள் பத்து நாட்கள் நடத்தி, பயிற்சி நிறைவு நாள் அன்று நாடி ஜோதிட நுணுக்கங்கள் புத்தகத்தை வெளியிட்டேன்.



ப்ருகு நந்தி நாடி என்ற பெயரில் பகுதி 1 முதல் பகுதி 4 வரை ஆய்வு நோக்கம் கொண்டு வெளியிட்டுள்ளோம். ஜோதிட பலன்கள் புத்தகத்தில் எளிய முறையில் பலன்கள் அறிந்து கொள்ளலாம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்

இங்ஙனம்

குருஜி குப்புசாமி M.A. (Astrology.)
பதிப்பு ஆசிரியர்
ஸ்ரீ சக்தி புத்தக நிலையம்.
தாராபுரம்
Cell No: 98436 77399

# நாடி ஜோதிடம்

ஜாதகத்தை பார்த்து பலன் சொல்வதற்கு ஜோதிட நூல்களில் பல வழி துறைகள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் குறிப்பாக நாடி நூல்களில் சொல்லப்பட்டுள்ள வழிமுறைகள் மிகவும் எளிமையானதும், துல்லியமானதும் ஆகும்.

பொதுவாக ஜோதிடர்கள் ஒரு ஜாதகத்தை ஆராயும் போது லக்கினத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து பாவ வாரியாக ஆராய்ந்து பலன் சொல்லுவது வழக்கம்.

பாவ காரகத்துவங்களுக்கு முக்கியம் கொடுத்து ஆராய்ந்து கூறப்படும் பலன்கள் துல்லியமாக இருப்பது இல்லை. இவற்றிற்கு என்ன காரணம் என்று ஜோதிட நூல்களை ஆராய்ந்த போது சரியான விடை கிடைக்க பெறவில்லை.

நமது பண்டைய நாடி கிரந்தங்களை ஆராய்ந்த போது இதற்கான விடை காண வழி கிடைக்கப் பெற்றது.. நாடி கிரந்தங்களின் அடிப்படை அறிந்து கொள்வோம்.

ஒரு வீட்டில் 12 அறைகள் உள்ளதாகவும், முதல் அறை தனக்கும், மூன்றாவது அறை சகோதர சகோதரிகளுக்கும் நான்காவது அறை தாயாருக்கும், ஐந்தாவது அறை குழந்தைகளுக்கும், ஏழாவது அறை மனைவிக்கும், ஒன்பதாவது அறை தந்தைக்கும் ஒதுக்கியிருப்பதாக வைத்துக் கொள்வோம்.

ஒரு குடும்பத்தில் பல நபர்கள் இருக்கும் போது ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் அறையிலேயே எப்போதும் இருக்க வேண்டும் என்று எந்த விதியும் கிடையாது.

எந்த ஒரு அறையிலும் யார் வேண்டுமானாலும் எப்போது வேண்டுமானாலும் பிரவேசிக்கலாம். தங்கள் அறையையும் மாற்றிக் கொள்ளலாம்.

சில சமயம் உறவினரோ, நண்பரோ யாராவது வீட்டிற்கு வந்து விட்டால் குடும்பத்தில் யாராவது ஒருவர் தங்களது அறையில் தங்க வைக்கலாம்.

கணவன் மனைவி இல்லாத சமயத்தில் வேறு ஒருத்தியுடன் தனது படுக்கை அறையை பகிர்ந்து கொள்ளலாம் . அவ்வாறே மனைவியும் செய்யலாம். ஆகவே யார் எந்த அறையில் இருக்கிறார்கள் என்பது முக்கியமில்லை. யார் யாருடன் இருக்கிறார்கள் என்பதே முக்கியம் ஆகும்.

கணவன் மனைவி இணைய வேண்டுமானால் படுக்கை அறையில் மட்டும் தான் இணைய வேண்டும் என்று கட்டாயம் எதுவும் கிடையாது- வீட்டில் யாரும் இல்லாத போது வேறு எந்த அறையிலும் இணையலாம். அவ்வாறு இணைவதால் எந்தவித தீங்கும் நேர்ந்து விடாது. இந்த அறையில் இவர்கள் இருந்தால் நன்றாக இருக்கும் என்று சொல்லுவது உன்னத நிலை.உத்தம நிலை.நடை முறை வாழ்க்கையில் எல்லோரும் உத்தமராக இருப்பது கிடையாது.

ஒன்பது கிரகங்களும் 12 பாவங்களில் எங்கு வேண்டுமானாலும் இருக்கலாம். எந்த கிரகம் எந்த கிரகத்துடன் தொடர்பு கொண்டுள்ளது என்பது மிக முக்கியமாகும்.

பாவகத்தின் காரகத்துவங்களுக்கு முக்கியம் கொடுப்பதை விட கிரகங்களின் காரகத்துவங்களுக்கு முக்கியம் கொடுத்து ஜாதகத்தை ஆராயும் போது பலன்கள் மிகத் துல்லியமாக வரும் என்பது உண்மை.

ஒரு அறையில் தனித்த ஒரு நபர் மட்டும் இருந்தால் அவருக்கு வேறு யாருடனும் தொடர்பு கிடையாது. ஒன்றுக்கு மேற்பட்டவர்கள் கூடும் போது அதற்கு ஒரு காரணம் உண்டு.

ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் சேர்ந்து இருப்பது ஜோதிடத்தில் யோகம் எனப்படும். யோகம் என்பதற்கு கிரக சேர்க்கை என்று பொருள்.

ஜாதகருடைய வாழ்க்கையில் என்ன நடக்கும் என்பதை அறிந்து கொள்ள கிரக சேர்க்கையை பார்க்க வேண்டும். எப்போது நடைபெறும் என்பதை அறிய கோட்சாரத்தை பார்க்க வேண்டும் என்பது நாடியின் விதியாகும்.

தசாபுத்தியின் மூலம் பலன்கள் நடைபெறும் காலத்தை நிர்ணயம் செய்கிறார்கள். தசாபுத்தி என்பது ஜென்ம நட்சத்திரத்தை அடிப்படையாகக் கொண்டது. அதாவது சந்திரனை அடிப்படையாகக் கொண்டது.. சந்திரன் உடல் காரகன் என்றும் மனசுகாரகன் என்றும் அழைக்கப் படுகின்றது.

கிரக சஞ்சாரம் மனித உடலிலும் மனத்திலும் மாற்றங்களை உண்டாக்குகின்றது. ஆகவே சந்திரனை அடிப்படையாக கொண்ட தசாபுத்தி மூலம் வாழ்க்கையில் ஏற்படும் மாற்றங்களைக் கூறலாம் என்பது பொதுவான கருத்து ஆகும்.

நாடி முறையில் அடிப்படை கருத்து வேறுபட்டதாகும். ஒரு மனிதனுடைய வாழ்க்கையில் உண்டாகும் நல்ல பலன்கள், தீய பலன்கள் இவற்றை அனுபவிப்பது அவனுடைய உடலோ, மனமோ அல்ல.அவனுக்குள் இருக்கும் ஆத்மாதான் அனுபவிக்கின்றது. உடல் மனம் என்பது ஆத்மாவின் கருவி ஆகும்.

மனிதனின் வாழ்க்கை அவன் பூர்வ ஜென்மத்தில் செய்த பாவ புண்ணியங்களைப் பொருத்தே அமைகின்றது என்று நமது வேத நூல்கள் கூறுகின்றன. ஜோதிடம் என்பது வேதத்தின் ஒரு அங்கமே ஆகும்.

மனிதன் இப்பிறவியில் அனுபவிப்பது எல்லாம் அவனது கர்ம பலன்களே ஆகும். இந்த கர்ம பலன்களைக் கொடுக்கும் கிரகம் கர்மகாரகனாகிய சனியாகும். இந்த பலன்களை அனுபவிப்பது ஜீவாத்மாவாகும். ஜீவாத்மாவைக் குறிக்கும் கிரகம் குருவாகும். ஜீவாத்மாவாகிய மனிதனுக்கு எப்போதும் ஒரு ஆசை இருந்து கொண்டே இருக்கும். ஆசைகள் அழிந்து விட்டால் அவனுடைய மனம் அழிந்து விடும். மனம் அழிந்து விட்டால் அவன் பரமாத்மாவுடன் ஐக்கியமாகிவிடுவான். ஆகவே மனிதனுக்கு ஏதாவது ஒரு ஆசை இருக்கத்தான் செய்யும்.

நாம் நினைப்பது போலதான் நடக்கும் என்பது ஒரு கருத்து. நாம் நினைப்பது ஒன்றாக இருப்பினும் நடப்பது ஒன்றாக இருக்கின்றது. ஏன் இந்த வேறுபட்ட முரண்பாடு.

ஒருவனுடைய விருப்பமும் அவன் அனுபவிக்க வேண்டிய கர்ம பலன்களும் ஒன்றாக இருந்து விட்டால் அவர் நினைப்பது எல்லாம் நடக்கும். அவனது விருப்பமும் கர்ம பலன்களும் வேறு வேறாக இருந்தால் அவன் நினைப்பது நடக்காது.

கர்ம காரகனான சனியோடு சேர்ந்த கிரகங்கள் பார்த்த கிரகங்கள் ஜாதகனுக்கு கர்ம பலன்களைக் கொடுக்கும்.

குருவோடு சேர்ந்த, பார்த்த கிரகங்கள் ஜாதகனுடைய விருப்பத்தைக் குறிக்கும்.

எந்த ஒரு ஜாதகத்தில் குருவும் சனியும் இணைந்து விட்டால் அவர்கள் வாழ்க்கையில் துன்பம் என்றால் என்ன என்பது தெரியாது. ஏனென்றால் இவர்கள் எண்ணியது எல்லாம் எண்ணியது போல் நடக்கும்.

ஒரு ஜாதகத்தில் சனியோடு செவ்வாயும் குருவோடு சுக்கிரனும் சேர்ந்து இருப்பின் ஜாதகனுடைய விருப்பம் வாழ்க்கையில் எல்லா சுகங்களையும் அனுபவிக்க வேண்டும் என்பதே ஆகும். ஆனால் அவனுக்கு கர்ம வினையின்படி அவனது வாழ்க்கை போராட்டமாகவே இருக்கும். அவன் அனுபவிக்க நினைப்பது எளிதில் கிடைக்காது. அவன் செய்யும் எல்லா செயல்களிலும் பல தடைகள் ஏற்படும்.

ஜாதகத்தில் சனியோடு சுக்கிரன், குருவோடு செவ்வாய் சேர்ந்து இருப்பின் ஜாதகன் கலகம் புரிவதிலும், வாதம் புரிவதிலும் பிறரை துன்புறுத்துவதிலும் விருப்பம் உடையவனாக இருப்பான். மேலும் பிறர் வாழ்க்கைக்கு முட்டுக் கட்டையாக இருப்பான்.

ஜாதகனுடைய கர்ம பலன்கள் சுகமானதாகவே இருக்கும். ஜாதகன் தேடிய பொருள்கள் எல்லாம் அவனை வந்து அடையும்.

கிரகத்தின் சஞ்சாரத்தால் மனதிலும், உடலிலும் மாற்றங்கள் உண்டாகின்றன.அந்த மாற்றங்களை ஜீவாத்மா உணர்கின்றது. அல்லது அனுபவிக்கின்றது. இந்த மாற்றங்களுக்கு காரணமான கிரகங்கள் சனியும், குருவும் ஆகும்.

ஜீவ காரகனான குருவும், கர்ம காரகனான சனியும் கோட்சார பலன்களில் மிகவும் முக்கியமானவை. இவை இரண்டிலும், சனியின் கோட்சார பலன்கள் மிகவும் முக்கியம்.

கர்ம காரகனான சனியை தபால்காரருடன் ஒப்பிடலாம். நமக்கு வரும் கடிதங்கள் சுபசெய்தியாகவும் இருக்கலாம். கெட்ட செய்தியாகவும் இருக்கலாம். கடிதத்தில் உள்ள செய்தியைப் பொருத்து தபால்காரனை நல்லவர் என்றோ கெட்டவர் என்றோ சொல்லக் கூடாது.

சனி கிரகம் கோட்சாரத்தில் நகர்ந்து செல்லும் போது ஜாதகனுடைய பிறந்த ஜாதகத்தில் உள்ள ஏதாவது கிரகத்துடன் சேரும் போதும் அல்லது பார்க்கும் போதும் பிறந்த ஜாதகத்தில் உள்ள கிரகம் தன் காரகத்துவ பலன்களை சனியோடு தொடர்பு ஏற்படும் போது கொடுக்கும்.

உதாரணமாக பிறந்த ஜாதகத்தில் மீனத்தில் சுக்கிரன் இருப்பதாக வைத்துக் கொள்வோம். மீனராசியில் சனி பிரவேசிக்கும் போது ஜாதகனுக்கு பணவருவாய் கூடும். சொத்து வாங்குதல், மனைவியின் மூலம் சுகமான பலன்கள் எல்லாம் அக்கால கட்டத்தில் கிடைக்கும். இது நடை முறையில் மிகச் சரியாக வரும்.

ஒரு சில ஜோதிடர்கள் மட்டுமே அறிந்து பலன்கள் கூறி வருகிறார்கள். இந்த விதியை மற்றவர்களுக்கு கூறுவது கிடையாது.

பொதுவாக கோட்சார பலன்கள் என்றால் ஜென்ம ராசியை முதல் பாவகமாக வைத்துக் கொண்டு அந்த ராசியில் கிரகங்கள் சஞ்சரிக்கும் போது என்ன பலன்கள் கிடைக்கும் என்று கூறி வருகிறார்கள்.

நாடியின் விதிப்படி கோட்சார கிரகம் ஒரு ராசியில் நுழையும் போது பிறந்த ஜாதகத்தில் அந்த ராசியில் எந்த ஒரு கிரகமும் இல்லை என்றால் எந்த பலனும் கொடுக்காது.

ஒரு கோட்சார கிரகம் பிறந்த ஜாதகத்தில் உள்ள இன்னொரு கிரகமும் ஒன்றோடு ஒன்று சேர்வதாலேயே கோட்சார கிரகம் பலன் கொடுக்கும் என்பது உண்மை.

கிரகங்களின் காரகதத்தவங்களுக்கு முக்கியதத்துவம் கொடுத்து ஜாதகங்களை ஆராய வேண்டும் என்பது நாடி முறை ஆகும்.. இந்த முறையில் ஜாதகத்தை ஆராய்வது என்பது எப்படி என்பதை நாம் அறிய வேண்டும்.

கிரக சேர்க்கை என்றால் ஒரே ராசியில் ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் சேர்ந்து இருப்பது என்றும், தான் இருக்கும் 7 வது ராசியில் இருக்கும் கிரகத்தை பார்க்கும் என்று ஜோதிட நூல்கள் கூறுகின்றன. இதன் பொருள் என்ன ஒன்றுக்கு மேற்பட்ட கிரகங்கள் ஒரே நேர் கோட்டில் வருவதை தான் கிரக சேர்க்கை என்றோ, கிரகப் பார்வை என்றோ, சொல்லப்பட்டு வருகின்றது.

நாடி ஜோதிடத்தில் இத்துடன் வேறு ஒரு விதியும் சேர்ந்து சொல்லப்பட்டுள்ளது. ராசிகளை கிழக்கு, மேற்கு வடக்கு, தெற்கு என்று நான்கு திசையாக மூல நூல்களில் பிரித்து உள்ளார்கள்.

இதன்படி மேஷம் முதலாக இடமிருந்து வலமாக கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு என்று 12 ராசிகளுக்கும் திசைகள் குறிக்கப்பட்டுள்ளன.

மேஷம் கிழக்கு திசை என்றால் அதற்கு 5வது ராசியும் 9வது ராசியான சிம்மம், தனுசு, ராசிகள் கிழக்கு திசையைக் குறிக்கின்றன. 1, 5, 9 கிழக்கு திசை ராசிகள் என்றால் 3, 7, 11 மேற்கு திசை ராசிகள் ஆகும்.

நாடி ஜோதிடபடி எதிர் திசையில் உள்ள ராசியில் இருக்கும் கிரகங்கள் ஒரே நேர் கோட்டில் இருப்பதாக கொண்டு பலன்கள் கூறப்பகின்றன.

இங்கு ஒரு நுணுக்கத்தை நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். மேஷ ராசிக்கு அதிபதி செவ்வாய் அதன் 2ம் ராசி ரிஷபம் அதன் அதிபதி சுக்கிரன் மேஷத்திற்கு 12 வது ராசியான மீனம் அதன் அதிபதி குரு. குருவும் சுக்கிரனும் செவ்வாய்க்கு நட்பு கிரகங்கள் ஆகும். ஆனால் குருவும் சுக்கிரனும் ஒருவருக்கு பகை. செவ்வாய் இருவருக்கும் நட்பு.

நாம் நண்பர்களுக்கு மத்தியில் இருக்கும் போது பல விதமான உதவிகள் நமக்கு கிடைக்கின்றன. பகைவர் மத்தியில் இருக்கும் போது பலவிதமான கஷ்டங்களை நாம் அனுபவிக்கின்றோம்.

நாடி ஜோதிடத்தில் ஒரு கிரகம் இருக்கும் ராசிக்கு 2வது மற்றும் 12 வது ராசிகளில் உள்ள கிரகங்களை கவனத்தில் எடுத்து கொள்ள வேண்டும்.

நாடி முறையில் ஜாதகத்தை பலன்கள் சொல்ல ஆராயும் போது எந்த விஷயத்தை பற்றி பலன் காண இருக்கின்றோம் என்பதை முதலில் தெரிந்து கொண்டு அந்த விஷயத்தை குறிக்கும் கிரகம் எது என்று தெரிந்து கொள்ள வேண்டும்.

காரகதத்துவ கிரகம் இருக்கும் ராசி அதிபதியின் காரகதத்துவங்களை தெரிந்து கொள்ள வேண்டும். காரகதத்துவம் இருக்கும் ராசிக்கு 1, 2, 3, 5, 7, 9, 11, 12 ம் ராசிகளில் ஏதாவது கிரகங்கள் இருந்தால் அக்கிரகத்தின் காரகதத்துவங்களை அறிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு ஆராய்ந்த பின் பலன்கள் சொல்லுவது மிகவும் எளிதாகும். இதற்கு ராசி சக்கரம் மட்டும் இருந்தாலே போதும். நடை முறையில் மிகவும் அற்புதமான பலன்கள் கிடைக்கின்றன.

| ராசியில் உள்ள | கோட்சார சூரியன் ஜனன ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1. காரியங்களில் வெற்றி<br>2. உடம்பிற்கு தெம்பு உண்டாகும். |
| சந் | 1.தந்தைக்கு கெட்ட பெயர் ஏற்படும்<br>2. தந்தைக்கு பிரயாணம் செய்யும் நிலை ஏற்படும்<br>3. தந்தைக்கு அவமானம் ஏற்படும். |
| செவ் | 1. உடலில் இரத்த சம்பந்தமான கோளாறுகள் ஏற்படும்<br>2.மாதவிடாய் பிரச்சனைகள் உண்டாகும். |
| புத | 1. தந்தைக்கு நிலம் சம்பந்தமாக லாபம் உண்டாகும்.<br>2. தந்தைக்கு வியாபாரத்தில் லாபம் உண்டாகும். |
| குரு | 1. மதிப்பு, கௌரவம் உண்டாகும்.<br>2. சான்றோர்கள் நட்பு உண்டாகும். |
| சுக் | 1. திருமண வாய்ப்புகள் ஏற்படும்.<br>2. காம உணர்வுகள் அதிகரிக்கும்<br>3. மனைவிக்கு நோய் உண்டாகும்.<br>4. பணத்தட்டுப்பாடு ஏற்படும். |
| சனி | 1.பண நெருக்கடி ஏற்படும்<br>2. தன்னம்பிக்கை இழக்க நேரிடும்.<br>3. செய் தொழில் பிரச்சனைகள் உண்டாகும்.<br>4. உத்தியோகத்தில் மன நிம்மதி குறையும். |
| ராகு | 1.சூதாட்டம், லாட்டரி ஸ்பெக்குலேசன் முதலியவற்றில் லாபம் உண்டாகும். |
| கேது | 1. குழந்தைகளால் மனத்துயரம் உண்டாகும்<br>2. அரசாங்கத்தால் கெட்ட பெயர் உண்டாகும்<br>3. மகிழ்ச்சியற்ற நிலை உண்டாகும். |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார சந்திரன் பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1. குடியிருப்புகளில் மாற்றம் ஏற்படும்<br>2.நோயாளிகள் அறுவை சிகிச்சை செய்து கொள்ள நேரிடும்<br>3. தந்தைக்கு பணவரவிக்காக பிரயானம் ஏற்படும். |
| சந் | 1. எதிர்பாலரின் உறவுகள் கிடைக்கும்.<br>2. மனக்குழப்பங்கள் ஏற்படும் |
| செவ் | 1. மனச்சஞ்சலங்கள் ஏற்படும். விபத்துக்கள் ஏற்படும்.<br>2. சகோதரன் அல்லது கணவருக்கு பயணம் உண்டாகும்.<br>3. தாயாருக்கு மனத்திடம் ஏற்படும். |
| புத | 1. பெண்களுக்கு கருப்பை கோளாறுகள் ஏற்படும்.<br>2. பெண்களால் கெட்ட பெயர் ஏற்படும்.<br>3. பெண்களால் அவமானங்கள் உண்டாகும்.<br>4. வியாபாரத்தில் இழப்பு ஏற்படும் |
| குரு | 1.வெளியூர் பயணங்கள் உண்டாகும்.<br>2. புதியன கற்பதில் விருப்பம் உண்டாகும்.<br>3. பெண்கள் தொடர்பு ஏற்படும் |
| சுக் | 1. வீண் செலவுகள் ஏற்படும்.<br>2. கடன் வாங்க வேண்டிய சூழ்நிலை உண்டாகும்.<br>3. ஏமாற்றுக்காரர்களுடன் தொடர்பு ஏற்படும். |
| சனி | 1. இடப்பெயர்ச்சி ஏற்படும்<br>2. வயதான பெண்களிடம் தொடர்பு ஏற்படும். |
| ராகு | 1. பெண்கள் வாழ்க்கையில் முக்கிய பங்கு வகிப்பார்கள்.<br>2. குடல் சம்பந்தமான வியாதி ஏற்படும் (வயிற்றுப்போக்கு) |
| கேது | 1. பெற்றோர்களுடன் கருத்து வேறுபாடுகள் உண்டாகும்.<br>2. பொது மக்கள் தொடர்பினால் தொல்லைகள் ஏற்படும். |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார செவ்வாய் பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1. இரத்த அழுத்தம், காய்ச்சல் போன்ற வியாதிகள் தோன்றும்<br>2. மனஉளைச்சல், சோர்வு உண்டாகும்.<br>3.மகனுக்கு உடம்பில் காயம் உண்டாகும் |
| சந் | 1. தாய்க்கு சுகவீனம் உண்டாகும்<br>2. அறுவை சிகிச்சை செய்ய நேரிடும்.<br>3. சகோதரனுக்கு அல்லது கணவருக்கு பயணம் ஏற்படும். |
| செவ் | 1. விபத்துக்கள் உண்டாகும்.<br>2. உடலில் அதிகப்படியான சக்தி உண்டாகும்.<br>3. உடல் உழைப்பு அதிகம் ஏற்படும். |
| புத | 1. எதிரிகளால் தொல்லை ஏற்படும்<br>2. மனச்சஞ்சலம் ஏற்படும்<br>3. கல்வி கற்பதில் ஈடுபாடு இருக்காது. |
| குரு | 1. உடலில் உஷ்ணம் அதிகரிக்கும்.<br>2. இரத்த அழுத்தம் அதிகரிக்கும்.<br>3. நெருப்பு, ஆயுதங்களால் அபாயம் உண்டாகும்.<br>4. தோள்பட்டையில் வலி உண்டாகும்<br>5. கணவனுக்கு இடமாற்றம் ஏற்படும் |
| சுக் | 1.கணவனுக்கு பண வருவாய் அதிகரிக்கும்<br>2. உறவினர்கள் தொடர்பு ஏற்படும் |
| சனி | 1. விபத்துக்கள் ஏற்படும்.<br>2. தொழிலில் போட்டி ஏற்படும்<br>3. மனநிம்மதி இழக்க நேரிடும்.<br>4. விரோதிகள் வலுப் பெறுவார்கள் |
| ராகு | 1. காம உணர்வுகள் அதிகரிக்கும்<br>2. சகோதரன் (அல்) கணவனுக்கு மரணம் உண்டாகலாம்<br>3. திருமணத் தடைகள் ஏற்படும் |
| கேது | 1. உகிக்க எண்ணங்கள் அதிகரிக்கும். |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார புதன் பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1. தந்தைக்கு நண்பர்கள் உதவி கிடைக்கும்<br>2. மகனுக்கு கல்வி கற்பதில் ஈடுபாடு உண்டாகும்<br>3. தந்தைக்கு நிலவருவாய் அதிகரிக்கும். |
| சந் | 1. கெட்ட பெயர் உண்டாகும்.<br>2. எதிர்பாலாரின் நட்பு கிடைக்கும்.<br>3. பயணங்கள் மேற்கொள்ள நேரிடும்<br>4. கலைத்தொடர்புப் பிரயாணம் ஏற்படும் (வருவாய்) |
| செவ் | 1. சகோதர்களுடன் கருத்து வேறுபாடுகள் உண்டாகும்.<br>2. நண்பர்களுடன் கருத்து வேறுபாடு உண்டாகும்.<br>.3.சகோதரன் (அல்) கணவனுக்குத் தோல் வியாதி ஏற்படும்<br>4. கணவனுக்கு புதிய பெண்கள் தொடர்பு உண்டாகும். |
| புத | 1. கல்வி கலைகள் கற்பதில் அதிக விருப்பம் ஏற்படும். |
| குரு | 1.கல்வி கலைகள் கற்பதில் அதிக விருப்பம் ஏற்படும்.<br>2.வேதம் அறிவு, நூல்கள் கற்றுக் கொள்வான்.<br>3. இளைஞர்களுக்கு மகிழ்ச்சி உண்டாகும். |
| சுக் | 1. பணவருவாய் அதிகரிக்கும்.<br>2. சொத்துக்கள் வாங்க நேரிடும்.<br>3. சுபகாரியஙகள் ஏற்படும். |
| சனி | 1. வியாபரத்தில் அதிக லாபம் உண்டாகும்.<br>2. நிலவருவாய் உண்டாகும். |
| ராகு | 1. பேச்சுத் திறன் அதிகரிக்கும். |
| கேது | 1. அனுகூலமான பலன்கள் ஏதும் நடக்காது.<br>2. நண்பர்களுடன் கருத்து வேறுபாடுகள் உண்டாகும். |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார குரு பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1.உத்யோக உயர்வி, அரசாங்க ஆதரவு 2. புகழ், கீர்த்தி, கௌரவம் 3. பெரிய மனிதர்களின் ஆதரவு, ஆன்மீகத்தில் ஈடுபாடு 4. ஆண் குழந்தை பிறப்பு |
| சந் | 1. இடமாற்றம் 2. பயணத்தினால் செலவு 3. விறுவிறுப்பினால் உடல் தொல்லை 4. மறைமுக விரோதிகளால் தொல்லை. |
| செவ் | 1. பெண்களுக்கு திருமணம் 2. இரத்த அழுத்தம் ஆண்களுக்கு அதிகரிக்கும் 3. அறுவை சிகிச்சை செய்ய வாய்ப்பு உண்டு. 4. சகோதரன், கணவனுக்கு சுக பலன்கள் 5. வீண்பிடிவாதம், ஆத்திரப்படுதல் |
| புத | 1. நிலம் வாங்குதல், வீடு கட்டுதல் 2. கல்வியில் வெற்றி உண்டாகும் 3. புதிய அனுகூலங்கள் 4. புனித பயணங்கள் ஏற்படும் |
| குரு | 1.புகழ், கீர்த்தி கௌரவம் உண்டாகும் 2. ஆன்மீக ஈடுபாடு 3. ஆண் குழந்தை பிறப்பு 4. மனதிருப்தி 5. திருமணம் (பெண்களுக்கு) |
| சுக் | 1. திருமணம் 2. பெண் குழந்தை பிறப்பு 3. சொத்துக்கள் பொருட்கள் சேர்த்தல் உண்டாகும் 4. சுக்கிரனுக்கு 7ல் யோகம் |
| சனி | 1.வேலை கிடைத்தல் 2. பதவி உயர்வு 3.வேலை மாற்றம், பொருளாதார முன்னேற்றம் |
| ராகு | 1.அறுவை சிகிச்சை, கருச்சிதைவு ஏற்படும் 2. கல்வியில் தடை, உறவினர் மரணம் 3. மனக்கலக்கம் (ராகு சனி ) விபத்து |
| கேது | 1. ஆன்மீன ஈடுபாடு, தீர்த்த யாத்திரை 2. வழக்கு, போட்டிகளில் வெற்றி 3. பலவீனம், மனநிம்மதி உண்டாகும் |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார சுக்கிரன் பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
| --- | --- |
| சூரி | 1. தந்தைக்கு பணவருவாய் உண்டாகும். |
| சந் | 1. மனைவிக்கு சுகவீனம் உண்டாகும்<br>2. பணவிரயம் உண்டாகும் |
| செவ் | 1. சகோதரனுக்கு சுக பலன்கள் உண்டாகும்<br>2. வீடுகட்ட அமைப்புகள் உண்டாகும்<br>3. மனைவி கருத்தரிக்க வாய்ப்பு உண்டாகும்.<br>4. திருமனம் ஆகாதவர்களுக்கு திருமன வாய்ப்பு உண்டாகும் |
| புத | 1. பணவருவாய் அதிகரிக்கும்<br>2. நிலம் சம்பந்தமான சொத்துக்கள் வருவாய் ஏற்படும் |
| குரு | 1. வருமானம் அதிகரிக்கும்<br>2. குடும்பத்தில் கருத்து வேறுபாடு உண்டாகும் |
| சுக் | 1.அதிஷ்ட பலன்கள் உண்டாகும்.<br>2.மனம் மகிழ்ச்சியுடன் இருக்கும் |
| சனி | 1. குடும்பத்தில் சுப காரியங்கள் நடைபெறும்<br>2. பணவருவாய் அதிகரிக்கும்<br>3. மனைவியின் ஆதரவு ஒத்துழைப்பு கிடைக்கும் |
| ராகு | 1.மனைவிக்கு சுப பலன்கள் உண்டாகும்<br>2. திருமண பலன்கள் நடைபெறும். |
| கேது | 1.குடும்பத்தில் பிளவு உண்டாகும். |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார சனி பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1.தந்தைக்கு சுகமின்மை, ஆண்குழந்தைக்கு சுகமின்மை 2.அரசு அதிகாரிகளால் தொல்லை 3. தொழில் வியாபாரத்தில் மிகுந்த சிரமம் 4.தந்தைக்கும் மகனுக்கும் சண்டை சச்சரவுகள் |
| சந் | 1.தாய்க்கு உடல்நலக்குறைவு 2. கெட்ட பெயர், அவமானங்கள், வெட்டி அலைச்சல் 3. தொழில் வளர்ச்சியில் திருப்தியின்மை, அனாவசிய செலவு 4.ஜாதகருக்கு வயிற்றில் கோளாறு |
| செவ் | 1. எதிரிகளால் தொல்லை, தொழில் முடக்கம் 2. சகோதரன் கணவனுக்கு கஷ்டம் 3. வேலை வாய்ப்பு, பதவி உயர்வு தடை 4. நிலம் வாங்குதல், வீண் சண்டை நிம்மதியின்மை |
| புத | 1.நிலம், தோட்டம் வாங்குதல், புதிய தொழில் ஆரம்பித்தல் 2. கல்வியில் வெற்றி, நண்பர்களின் ஆதரவு |
| குரு | 1.உத்யோகம் கிடைத்தல், மாற்றம், பதவி உயர்வு 2. பணவருவாய், புகழ், கீர்த்தி, கௌரவம் 3.பெரியோர்களின் அன்பு, ஆதரவு, குருவுடன் சந்திப்பு 4.அரசு மற்றுமட அரசாங்க அதிகாரிகளின் ஆதரவு 5.சிலருக்கு சிறை தண்டனை, அபராதம் ஏற்படுதல் 6. வாய்வுக் கோளாறு ஏற்படுதல் |
| சுக் | 1. அசையா சொத்து, வாகனம் ஆடம்பரப் பொருள் வாங்குதல் 2. வீடு கட்டுதல், பண வருவாய் உண்டாகும் 3. பெண்கள் ஆதரவு, மனைவியின் ஆதரவு கிடைக்கும் 4.மனைவிக்கு மூட்டுவலி உண்டாகும். |
| சனி | 1.தொல்லைகள், தொழில் மாற்றம் |
| ராகு | 1. உறவினர் மரணம், 2. வியாதி, விஷ ஜந்துக்களின தொல்லை 3. கடின உழைப்பு 4. மருத்துவ தொழில் 5. திருட்டு வழியில் சொத்து சேர்த்தல் |
| கேது | 1. தொழில் முடக்கம், சோம்பேறித்தனம் 2.வேலை வாய்ப்பு பதவி உயர்வில் தடை 3. தீர்த்த யாத்திரை (நீர் ராசிகள் 4.ஆன்மீக ஈடுபாடு 5.குறிக்கோளற்ற தன்மை 6. வழக்குகள் உண்டாகும் |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார ராகு பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1. மகன், தந்தைக் கு உடல் நலக்குறைவு (கண்டம்)<br>2. சோம்பேறித்தனம், கெட்ட செய்தி கேட்டல்<br>3. அரசாங்கத்தினால் தொல்லை |
| சந் | 1. தாய்க்கு உடல் நலக்குறைவு (கண்டம்)<br>2. செய் வினை, பில்லி சூன்யங்களால் தொல்லை<br>3. மனநோய், மனக்கலக்கம், இனம்புரியாத பயம் |
| செவ் | 1. வாகனவிபத்து, வெட்டுக்காயம், அறுவை சிகிச்சை<br>2. இரத்த சம்பந்தமான வியாதி, குறை பிரசவம்<br>3. சகோதரன், கணவனுக்கு உடல்நலக் குறைவு |
| புத | 1.தோல் சம்மந்தப்பட்ட வியாதி, 2. மனக்குழப்பம்<br>3.புதிய வாகனங்கள் வாங்குதல் 4.அறிவுக்கூர்மை |
| குரு | 1. விபத்துக்கள், உறவினர் மரணம், அமைதியின்மை<br>2. வாத நோய், முகத்தில் கரும்புள்ளிகள் தோன்றுதல் |
| சுக் | 1. மனைவி அல்லது சகோதரி மகளுக்கு உடல்நலக் குறைவு<br>2. வாகனம், ஆடம்பர பொருள்கள் வாங்குதல்<br>3. மாடி வீடு கட்டுதல் 4. கள்ளக்காதல் புரிதல்<br>5. திருட்டு வழியில் சொத்து சேர்த்தல்<br>6. சொத்துக்கள் மீது வழக்கு |
| சனி | 1.உறவினர் மரணம் 2. கெட்டவர்கள் தொடர்பு<br>3. சோம்பேறித்தனம் 4. வாகன சுகம் |
| ராகு | 1. சராசரியான பலன்கள். ராகுவிடன் சேர்ந்துள்ள கிரகங்களைப் பொறுத்து பலன்கள் |
| கேது | 1. நல்ல பலன்கள் நடக்கத் தடை<br>2. சுக்கிரன் கேது இணைப்பு பொருள் இழப்பு. |

| ராசியில் உள்ள கிரகம் | கோட்சார கேது பிறந்த ஜாதகத்தில் கிரகங்கள் உள்ள ராசியில் இணையும் போது ஏற்படும் பலன்கள் |
|---|---|
| சூரி | 1.தந்தை, மகனுக்கு உடல்நலக் குறைவு<br>2. ஆன்மீகத் தொடர்பு, குருவுடன் தொடர்பு<br>3. தந்தையார் புனித பயணம் செல்லுதல் |
| சந் | 1. தாய்க்கு உடல்நலக்குறைவு<br>2. ஆன்மீக ஈடுபாடு, புண்ணிய நதிகளில் நீராடுதல்<br>3. தான தருமங்கள் செய்தல் |
| செவ் | 1. இரத்த அழுத்தம், நரம்புத் தளர்ச்சி, வியாதிகள்<br>2. சகோதரன், கணவனுக்கு மனக்குழப்பம்<br>3. கணவனுடன் கருத்து வேறுபாடு, சண்டை சச்சரவுகள்<br>4. கணவன் மனைவி பிரிவு, வழக் க தொடர்தல்<br>5. பெண்கள் விதவையாதல் |
| புத | 1. நிலத் தகராறு, வழக்கு தொடர்தல் 2. கல்வியில் தடை 3. தோல் வியாதி 4. வியாபாரத்தில் தடை, 5. சட்டம் பயிலுதல் 6. நண்பர்களுடன் கருத்து வேறுபாடுகள் 7. காதல் விவகாரத்தில் சண்டை சச்சரவுகள் |
| குரு | 1. சோம்பேறித்தனம் 2. ஆன்மீக ஈடுபாடு 3. நல்லவை நடப்பதில் தடை 4. நரம்புத் தளர்ச்சி 5. உடல் நலக்குறைவு |
| சுக் | 1. மனைவி, சகோதரிக்கு உடல் நலக்குறைவு<br>2. மனைவியுடன் கருத்து வேறுபாடு பிரிவு ஏற்படலாம்<br>3. பணவருவாயில் தடை |
| சனி | 1. உத்யோகம் கிடைப்பது, பதவி உயர்வில் தடை<br>2. சோம்பேறித்தனம் வீண் அலைச்சல், தொழில் முடக்கம்<br>3. ஆன்மீக ஈடுபாடு, தீர்த்த யாத்திரை செல்லுதல் |
| ராகு | 1. வயிற்று கோளாறு 2. வயிற்றுபோக்கு |
| கேது | 1. குடும்பத்தில் ஒற்றுமை குறைவு, மன வேறுபாடுகள் |